உ



ஸ்ரீ திருமுருகன் துணை.

நாளது பிர்மாதீச ஆண்டு
பங்குனித் திங்கள் 25-ம் நாள்
நடைபெற்ற திருமணத்தை முன்னிட்டு
வழங்கிய அன்பளிப்பு.

7-4-74

முருகா !





சிரஞ்: சுகவன குப்தா   சௌ: கிருஷ்ணவேணி

## திருமண வாழ்த்து.

நேரிசை வெண்பா :

நம்பி சுகவனமும் நம் கிருஷ்ணவேணியும்
எம்பிரான் இன்னருளால் இன்புற்று - அம்புவியில்
பல்லாண்டு வாழ்க பலநலமும் எய்தியே
எல்லாரும் ஏத்த இனிது.

25-3-74

அன்பன்,
கிருபானந்தவாரி

ஸ்ரீ விநாயகர் துணை.



## ஸ்ரீ விநாயகர் துதி.

ந்து கரத்தனை யானை முகத்தனை
ந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
ந்திமகன் றனை ஞானக் கொழுந்தினைப்
ந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே.
(திருமந்திரம்) 1

ருவாக்கும் செய்கருமம் கைக்கூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் உருவாக்கும்
தலால் வானோரும் ஆனை முகத்தானைக்
ாதலால் கூப்புவர் தம்கை. 2

நாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
நாயகனே வேட்கை தணிவிப்பான் விநாயகனே
ண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினால்
ண்ணிற் பணிமின் கனிந்து 3

2

உ

# தீப லக்ஷ்மி திருவிளக்கு வழிபாடு



ஊன் ஆனாய் உயிர் ஆனாய்
உயிரில் ஊறும் உணர்வானாய்

* வான் ஆதி ஐம் பூத
வகை எல்லாம் நீ ஆனாய்

தேன் ஆரும் மலர்க் கொன்றைச்
சிவம் என்னும் பொருள் ஆனாய்

நான் ஆனாய் உயிர்க்கு உயிரே
** ஞானப் பேரொளி யுமையே

---

* "வான் ஆதி பூதம்" என்பது முப்பத்தாறு தத்துவங்கள்

** "ஞானப் பேரொளி" ஞானப்பூங்குழல், ஞானப் பூங்கோதை என்னும் திருநாமங்கள் நமது வழிபடு கடவுளாகிய திருக்காளத்தி அம்மையாருக்கு உரியன.

# அகவல்

விளக்கே திருவிளக்கே வேந்தன் உடற்பிறப்பே
ஜோதி மணிவிளக்கே ஸ்ரீதேவி பொன்மணியே
அந்திவிளக்கே அலங்கார நாயகியே
காந்தி விளக்கே காமாக்ஷித் தாயாரே
பசும்பொன் விளக்கு வைத்தும் பஞ்சுத் திரிபோட்டுக்
குளம்போல எண்ணெய்விட்டுக் கோலமுடன்
ஏற்றிவைத்தேன்
ஏற்றினேன் நெய்விளக்கு எந்தன் குடிவிளங்க
வைத்தேன் திருவிளக்கு மாளிகையும் தான்விளங்க
மாளிகையில் ஜோதியுள்ள மாதாவைக்கண்டு
மகிழ்ந்தேன்யான்
மாங்கல்யப்பிச்சை மடிப்பிச்சை தாரும் அம்மா
சந்தான பிச்சையுடன் தனங்களும் தாரும் அம்மா
பெட்டி நிறையப் பூஷணங்கள் தாரும் அம்மா
பட்டி நிறையப் பால் பசுவைத் தாரும் அம்மா
கொட்டகை நிறையக் குதிரைகளைத் தாரும் அம்மா
புகழுடம்பைத் தாருமம்மா பக்கத்தில் நில்லுமம்மா
அல்லும்பகலும் என்றன் அண்டையிலே நில்லுமம்மா

(நமஸ்காரம்)

சேவித் தெழுந்திருந்தேன் தேவிவடிவங்கண்டேன்
வச்சிர கிரீடங்கண்டேன் வைடூர்ய மேனிகண்டேன்
முத்துகொண்டைகண்டேன் முழுப்பச்சை மாலைகண்டேன்
ரிவுமுடிகண்டேன் தாழைமடல் சூடக்கண்டேன்

பின்னலழகு கண்டேன் பிறைபோல நெற்றிகண்டேன்
சாந்துடன் நெற்றி கண்டேன் தாயார் வடிவங்கண்டேன்
கமலத் திருமுகத்தில் கஸ்தூரிப் பொட்டுக் கண்டேன்
மார்பில் பதக்கம் மின்ன மாலையசையக் கண்டேன்
கைவளையல் கலகலென்னக் கணையாழி மின்னக்கண்டேன்
தங்க ஒட்டியாணம் தகதகெனச் ஜொலிக்கக் கண்டேன்
காலிற் சிலம்பு கண்டேன் காலாழி பீலிகண்டேன்
மங்கள நாயகியை மனங்குளிரக் கண்டு மகிழ்ந்தேன்
அடியாள் நா

அன்னையே அருந்துணையே அருகிருந்து காருமம்மா
வந்த வினையகற்றி மகாபாக்கியம் தாரும் அம்மா
...யிரும் உன்றன் தாளடியில் சரணம் என்றேன்
மாதாவே யுன்றன் மலரடியில் நான் பணிந்தேன்

---

## ( நமஸ்காரம் )

இந்த அகவலைப்பாடி முடித்த பின்பு பதினாறு நமஸ்கார செய்தல் வேண்டும். அதன் பின் தீப லக்ஷ்மியினிடமிருந் வேண்டிய வரங்களைத் தரும்படி மேலும் மேலும் வி ணப்பஞ் செய்தல் வேண்டும்.

சர்வ மங்கள மாங்கல்யே
சிவே ஸர்வார்த்த ஸாதகே
சரண்யே திரியம்பிகே தேவீ
நாராயணீ நமோஸ்துதே

உ

திருச்சிற்றம்பலம்.

# திருவிளக்கு அர்ச்சனை

பொன்னும் மெய்ப்பொருளும் தருவாய் போற்றி
போகமும் திருவும் புணர்ப்பாய் போற்றி
முற்றறி வொளியாய் மிளிர்ந்தாய் போற்றி
மூவுலகும் நிறைந் திருந்தாய் போற்றி
வரம்பி லின்பமாய் வளர்ந்தாய் போற்றி
வானமாய் அருண்மழை பொழிந்தாய் போற்றி
இயற்கை அறிவொளி யானாய் போற்றி
ஈரேழுலகம் ஈன்றாய் போற்றி
பிறர்வயமாகப் பெரியோய் போற்றி
பேரின்பப் பெருக்காய்ப் பொலிந்தோய் போற்றி
பேரருட் கடலாம் பொருளே போற்றி
பெரியோர்க் கெல்லாம் பெரியாய் போற்றி
முடிவி லாற்றல் உடையாய் போற்றி
மூவுல குந்தொழ மூத்தோய் போற்றி
அளவிலாச் செல்வம் தருவாய் போற்றி
ஆனந்த அறிவொளி விளக்கே போற்றி

உ

திருச்சிற்றம்பலம்

# திருவிளக்கு பூஜை வழிபாடு.

## அர்ச்சனை.

ஓம் சிவாய நம :
ஓம் சிவசக்தியே நம :
ஓம் இச்சா சக்தியே நம :
ஓம் கிரியா சக்தியே நம :
ஓம் சொர்ண சொரூபியே நம :
ஓம் ஜோதி லக்ஷ்மியே நம :
ஓம் தீப லக்ஷ்மியே நம :
ஓம் மகா லக்ஷ்மியே நம :
ஓம் தன லக்ஷ்மியே நம :
ஓம் தான்ய லக்ஷ்மியே நம :
ஓம் தைர்ய லக்ஷ்மியே நம :
ஓம் வீர லக்ஷ்மியே நம :
ஓம் விஜய லக்ஷ்மியே நம :
ஓம் வித்யா லக்ஷ்மியே நம :
ஓம் ஜெய லக்ஷ்மியே நம :
ஓம் வர லக்ஷ்மியே நம :
ஓம் கஜலக்ஷ்மியே நம :
ஓம் காமவல்லியே நம :
ஓம் காமாக்ஷி சுந்தரியே நம:

ஓம் சுபலக்ஷ்மியே நம :
ஓம் இராஜ லக்ஷ்மியே நம :
ஓம் கிரக லக்ஷ்மியே நம :
ஓம் சித்த லக்ஷ்மியே நம :
ஓம் சீதா லக்ஷ்மியே நம :
ஓம் திரிபுர லக்ஷ்மியே நம :
ஓம் சர்வமங்கள காரணியே நம :
ஓம் சர்வ வீக்க நிவாரணியே நம :
ஓம் சர்வாங்க சுந்தரியே நம :
ஓம் சௌபாக்கிய லக்ஷ்மியே நம :
ஓம் நவக்கிரக தாயினியே நம :
ஓம் அண்டர் நாயகியே நம :
ஓம் அலங்கார நாயகியே நம :
ஓம் ஆனந்த சொரூபியே நம :
ஓம் அகிலாண்ட நாயகியே நம :
ஓம் பிரம்மாண்ட நாயகியே நம :
ஓம் எனும் சிற்பரத்தாளே
அபாய மறுக்கும் அறுக்கோணத்தி
சொற்பவத்தி சூக்ஷ்ம ரூபி
சரணம் சரணம் தாள் பணிந்தே னுனை
தவம் பொறுத்து பலபவுசுந்தான் கொடுத்து
விக்கினங்கள் வாராமல் வேலிபோல் காத்து
ஆதரித் தெனக்கு அருள்புரிவாயே
புவன சுந்தரி போற்றி வணக்கம்
குருவடிவாய் வந்து உபதேசங்கள்
கொடுத்துன் திருவடி தந்தருள்வாயே

# ஸ்ரீ துளசி ஸ்தோத்ரம்

ஸ்ரீமத் துளஸியம்மா திருவே கல்யாணியம்மா
வெள்ளிக்கிழமை தன்னில் விளங்குகின்ற மாதாவே
செவ்வாய்க்கிழமை செழிக்கவந்த செந்திருவே
தாயாரே யுந்தன் தாளிணையில் நான் பணிந்தேன்
பச்சைப் பசுமையுள்ள துளசி நமஸ்தே
பரிமளக்கும் மூலக் கொழுந்தே நமஸ்தே
அற்பப் பிறப்பைத் தவிர்ப்பாய் நமஸ்தே
அஷ்ட ஐஸ்வர்யம் அளிப்பாய் நமஸ்தே
ஹரியுடைய தேவி அழகி நமஸ்தே
அடைந்தார்க்கு இன்பம் அளிப்பாய் நமஸ்தே
[illegible]யென்னும் மருவே நமஸ்தே
வைகுண்ட வாஸியுடன் மகிழ்வாய் நமஸ்தே
அன்புடனே நல்ல அருந்துளசி கொண்டுவந்து
மண்ணின்மேல் நட்டு மகிழ்ந்து நல்ல நீரூற்றி
முற்றத்தில் தான்வளர்த்து முத்துப்போல் கோலமிட்டு
செங்காவி சுற்றுமிட்டு திருவிளக்கு மேற்றிவைத்து
பழங்களுடன் தேங்காயும் தாம்பூலம் தட்டில்வைத்து
புஷ்பங்களைச் சொரிந்து பூஜித்த பேர்களுக்கு
என்ன பலனென்று ஹ்ருஷீகேசர் தான்கேட்க
மங்களமான துளசி மகிழ்ந்துரைப்பாள்
மங்களமாய் என்னைவைத்து மகிழ்ந்து உபாஸித்தவர்கள்
தீவினையைப்போக்கிச் சிறந்த பலன் நானளிப்பேன்
அரும்பிணியைநீக்கி அஷ்டஐஸ்வரியம் நானளிப்பேன்

தரித்திரத்தைநீக்கி செல்வத்தை நான் கொடுப்பேன்
புத்திரனில்லாதவர்க்கு புத்திர பாக்கியமளிப்பேன்
கன்னிகைகள் பூஜை செய்தால் நல்ல கணவரை
கூட்டுவிப்பேன்
கிரகஸ்தர்கள் பூஜை செய்தால் கீர்த்தியுடன் வாழவைப்பேன்
முமுக்ஷுக்கள் பூஜை செய்தால் மோக்ஷபதம் கொடுப்பேன்
கோடிகாராம் பசுவைகன்றுடனே கொண்டுவந்து
கொம்புக்கு பொன்னமைத்து குளம்புக்கு வெள்ளிகட்டி
கங்கைக் கரைதனிலே கிரஹண புண்யகாலத்தில்
பாலுருவி அந்தணர்க்கு மகாதானஞ் செய்தபலன்
தானளிப்பேன் சத்தியமென்று நாயகியுஞ் சொல்லலுமே
அப்படியே யாகவென்று திருமால் அறிக்கையிட்டார்
இப்படியே அன்புடனே ஏற்றித் தொழுதவர்கள்
அற்புதமாய் வாழ்ந்திடுவார் பரதேவிதன்னருளால்

துளசி ஸ்தோத்ரம் முற்றிற்று.



ஓம் ஸ்ரீ கந்யகாபரமேச்வர்யை நம :

# ஸ்ரீ வாசவி அஷ்டோத்ரசத நாமாவளி.

1 ஓம் ஸௌபாக்ய ஜநந்யை நம :
2 ,, மாத்ரே நம :
3 ,, மாங்கல்யாயை நம :
4 ,, மாநவர்த்திந்யை நம :
5 ,, மஹா கீர்த்தி ப்ரஸாரிண்யை நம :
6 ,, மஹா பாக்ய ப்ரதாயிந்யை நம :
7 ,, வாஸவாம்பாயை நம :
8 ,, கமலாக்ஷ்யை நம :
9 ,, விஷ்ணுவர்த்தந மத ஹாரிண்யை நம :
10 ,, வைச்ய வம்சோத்பவாயை நம :
11 ,, சித்யை நம :
12 ,, குலகீர்த்தி ப்ரவர்த்திந்யை நம :
13 ,, குமார்யை நம :
14 ,, கந்யகாயை நம :
15 ,, காம்யதாயை நம :
16 ,, கருணாநித்யை நம :

17 ஓம் விசித்ர ரூபாயை நம :
18 ,, பாலாயை நம :
19 ,, விசேஷ பலதாயிந்யை நம :
20 ,, ஸத்யகீர்த்யை நம :
21 ,, ஸத்யவத்யை நம :
22 ,, ஸர்வாவயவ சோபிந்யை நம :
23 ,, த்ருடசித்த மஹா மூர்த்யை நம :
24 ,, ஞானாக்நி குண்ட விலாஸிந்யை நம :
25 ,, கந்யகாபரமேச்வர்யை நம :
26 ,, வைச்ய வம்சாப்தி சந்த்ரிகாயை நம :
27 ,, த்ரிதீவர்ண நிலயாயை நம :
28 ,, ஸாம்ராஜ்ய சுகதாயிந்யை நம :
29 ,, பேநகொண்ட புராவாஸாயை நம :
30 ,, விருபாக்ஷ ஸஹோதர்யை நம :
31 ,, விச்வக்யாதாயை நம :
32 ,, விமாநஸ்தாயை நம :
33 ,, மஹோத்ஸவ விலாஸின்யை நம :
34 ,, வைவாஹ மண்டபஸ்தாயை நம :
35 ,, மஹா விபவ சாலிந்யை நம :
36 ,, பாலநாகர ஸுப்ரீதாயை நம :
37 ,, ஸௌகந்தி குசும ப்ரீதாயை நம :
38 ,, ஸதா ஸௌகந்த லேபாயை நம :

39 ஓம் ஸத்ய ப்ரமாண நிலயாயை நம:
40 ,, பத்மபாண்யை நம:
41 ,, க்ஷமாவத்யை நம:
42 ,, வ்யாஸோக்த விதி வர்த்திந்யை நம:
43 ,, ப்ரம்ஹ ப்ரதிஷ்டா ஸுப்ரீதாயை நம:
44 ,, ஸர்வப்ராண ஹிதேரதாயை நம:
45 ,, காந்தாயை நம:
46 ,, கமல கந்திந்யை நம:
47 ,, காமிதார்த்த ப்ரதாயிந்யை நம:
48 ,, மல்லிகா குஸும ஸுப்ரீதாயை நம:
49 ,, முநிகாருண்ய தோஷிண்யை நம:
50 ,, சித்ர ரூபாயை நம:
51 ,, சித்ர வேஷாயை நம:
52 ,, சித்ர கீர்த்தி ப்ரஸாரிண்யை நம:
53 ,, விசித்ர மஹிமாயை நம:
54 ,, நாராயிண்யை நம:
55 ,, நமிதாஜன போஷிண்யை நம:
56 ,, கீதகா நாநந்த கர்யை நம:
57 ,, ஸ்வார்த்தி காஹ்லாத காரிண்யை நம:
58 ,, புண்ய கீர்த்யை நம:
59 ,, புஷ்பமாலா விபூஷண்யை நம:
60 ,, ஸ்வர்ண ப்ரபாயை நம:

61 ஓம் ஸ்வர்ண காந்த்யை நம :
62 ,, கலாயை நம :
63 ,, ச்ருஷ்டி ஸ்திதி லய காரணாயை நம :
64 ,, பாவந்யை நம :
65 ,, புண்ய சாரிண்யை நம :
66 ,, கல்மஷாரண்ய வஹ்நயே நம :
67 ,, வாணிஜ்ய வித்யா தர்மஜ்ஞாயை நம :
68 ,, பவ பந்த விநாசிந்யை நம :
69 ,, ஸதாஸத் தர்ம பூஷண்யை நம :
70 ,, பிந்துநாத களாத்மிகாயை நம :
71 ,, களாஷோடச ஸம்யுதாயை நம :
72 ,, தர்ம ப்ரதாயை நம :
73 ,, தர்ம சித்தாயை நம ,
74 ,, கல்யாண்யை நம :
75 ,, லாப காரிண்யை நம :
76 ,, நாயக்யை நம :
77 ,, நகரஸ்தாயை நம :
78 ,, நாநாரத்ந விபூஷணாயை நம :
79 ,, ம்ருடா தாராயை நம :

80 ஓம் குஹ்யாயை நம :
81 ,, தேவிகாயை நம :
82 ,, ஸுகோமளாங்க்யை நம :
83 ,, ஸுகுஞ்யை நம :
84 ,, ஸுமுக்யை நம :
85 ,, ஸுப தாயிந்யை நம :
86 ,, தேவ துர்க்காயை நம :
87 ,, ஜாஹ்நவ்யை நம :
88 ,, தாக்ஷாயிண்யை நம :
89 ,, த்ரைலோக்ய ஜநந்யை நம :
90 ,, பஞ்ச பூதாத்மிகாயை நம :
91 ,, ப்ரம்ஹ வித்யா ப்ரதாயிந்யை நம :
92 ,, ஸுபாஷிண்யை நம :
93 ,, ஸுவாஸிந்யை நம :
94 ,, ஸர்வ மந்த்ர பல ப்ரதாயை நம :
95 ,, வைச்ய ப்ரபூஜிதாயை நம :
96 ,, ஹ்ருதய க்ரந்தி பேதிந்யை நம ;
97 ,, கரவீர நிவாஸிந்யை நம :
98 ,, ஸ்ரீமத் கந்யா சிரோமண்யை நம :
99 ,, ஸத்பக்தி சாலிந்யை நம :
100 ,, ப்ரம்ஹ விஷ்ணு சிவாத்மிகாயை நம :

101 ஓம் ஸர்வ மோஹிந்யை நம:
102 ,, வேத சாஸ்த்ர ப்ரமாணுயை நம:
103 ,, விசாலாக்ஷ்யை நம:
104 ,, ஸர்வோபத்ரவ நாசிந்யை நம:
105 ,, ஸௌந்தர்ய பீட நிலயாயை நம:
106 ,, ஸௌமங்கல்யாதி தேவதாயை நம:
107 ,, ஸ்ரீ மந்த்ர புரவாஸிந்யை நம:
108 ,, ஸர்வ மங்களாயை நம:

ஓம் நாநாவித திவ்ய பரிமள மந்த்ர புஷ்பாணி சமர்ப்பயாமி

ஓங்காரத்தை ஆதி அந்தம் இரண்டிலும் உபயோகித்தல் சிறந்தது.

ஓம் தத் ஸத்.

---

இஃது வாசவி விஜயத்தினின்றும் எடுத்து அச்சடிக்கப்பெற்றது.

# சனீஸ்வரர் நவக்கோள்கள் திருமுன்

## கோளறு பதிகம்

வேயுறு தோளிபங்கன் விட முண்டகண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந் தென்
உளமே புகுந்தவதனல்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனி பாம்பிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல வவை நல்ல நல்ல
வடியாரவர்க்கு மிகவே

என்பொடு கொம்பொடாமை யிவை மார்பிலங்க
வெரு தேறியேழையுடனே
பொன்பொதி மத்தமாலை புனல் சூடிவந்தெ
னுளமே புகுந்தவதனல்
ஒன்பதொடொன்றேடேழு பதினெட்டோடாறு
முடனுய நாள் களவை தாம்
அன்பொடு நல்லநல்ல வவை நல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே

உருவளர் பவளமேனி யொளிநீரணிந்து
வுமையோடும் வெள்ளை விடைமேல்
முருகலர் கொன்றை திங்கண் முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனல்
திருமகள் கலையதூர்தி செயமாது பூமி
திசை தெய்வ மானபலவும்
அருநெதி நல்ல நல்லவவை நல்ல நல்ல
வடியாரவர்க்கு மிகவே.

மதிநுதன் மங்கையோடு வடபாலிருந்து
மறையோது மெங்கள்பரமன்

நதியொடு கொன்றைமாலை முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்

கொதியுறுகாலனங்கி நமனோடுதூதர்
கொடுநோய் களானபலவும்

அதிகுண நல்லநல்ல வவை நல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே. 4

நஞ்சணி கண்டனெந்தை மடவாடனோடும்.
விடையேறு நங்கள் பரமன்

துஞ்சிருள்வன்னி கொன்றை முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்

வெஞ்சினவவுணரோடு முருமிடியுமின்னு
மிகையான பூதமவையும்.

அஞ்சிடு நல்லநல்ல வவை நல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே 5

வாள்வரிய தளதாடை வரிகோவணத்தர்
மடவாட னோடுமுடனாய்

நாண்மலர்வன்னி கொன்றை நதிசூடிவந்தெ
னுளமே புகுந்தவதனால்

கோளரியுழுவையோடு கொலையானைகேழல்
கொடுநாக மோடுகரடி

ஆளரி நல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே 6

செப்பிள முலை நன்மங்கை யொருபாகமாக
விடையேறு செல்வனடைவார்
ஒப்பிள மதியுமப்பு முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனுல்
வெப்பொடு குளிரும்வாத மிகையானபித்தும்
வினை யான வந்து நலியா
அப்படி நல்லநல்ல வவை நல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே.

வேள்படவிழிசெய்தன்று விடைமேலிருந்து
மடவாட னேடுமுடனுய்
வாண்மதி வன்னிகொன்றை மலர்சூடிவந்தெ
னுளமே புகுந்தவதனுல்
ஏழ்கடல் சூழிலங்கை யரையன்றனேடு
மிடரானவந்து நலியா
ஆழ்கடனல்லநல்ல வவை நல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே.

பலபலவேடமாகும் பரனுரிபாகன்
பசுவேறு மெங்கள் பரமன்
சலமகளோடெருக்கு முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனுல்
மலர்மிசை யோனுமாலு மறையோடுதேவர்
வருகால மானபலவும்
அலைகடல் மேருநல்ல வவை நல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே

கொத்தலர் குழலியோடு விசையற்குநல்கு
குணமாய வேடவிகிர்தன்

மத்தமு மதியுநாக முடிமேலணிந்தெ
னுளமே புகுந்தவதனால்

புத்தரொட மணவாதி லழிவிக்குமண்ண
றிருநீறு செம்மைதிடமே

அத்தகு நல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே 10

தேனமர் பொழில் கொளாலை விளைசெந்நெறுன்னி
வளர்செம்பொ னெங்குநிகழ

நான் முகனாதியாய பிரமாபுரத்து
மறை ஞான ஞான முனிவன்

தானுறு கோளுநாளு மடியாரைவந்து
நலியாதவண்ண முரைசெய்

ஆனசொன்மாலையோது மடியார்கள் வானி
லரசாள் வராணை நமதே. 11

திருச்சிற்றம்பலம்.



உ

ஸ்ரீ திருமுருகன் துணை.

# அபிராமியந்தாதி

## காப்பு.

தாரமர் கொன்றையுஞ் சண்பக மாலையுஞ் சாத்துந்தில்லை
ஊரர்தம் பாகத் துமைமைந்த னேயுல கேழும்பெற்ற
சீரபி ராமியந் தாதியெப் போதுமென் சிந்தையுள்ளே
காரமர் மேனிக் கணபதி யேநிற்கக் கட்டுரையே.

## நூல்.

உதிக்கின்ற செங்கதி ருச்சித் திலக முணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்க மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி யபிராமி யென்றன் விழுத்துணையே

துணையுந் தொழுந்தெய்வ மும்பெற்ற தாயுஞ் சுருதிகளின்
பணையுங் கொழுந்தும் பதிகொண்ட வேரும் பனிமலர்ப்பூங்
கணையுங் கருப்புச் சிலையுமென் பாசாங் குசமுங்கையி
லணையுந் திரிபுர சுந்தரி யாவ தறிந்தனமே

அறிந்தே னெவரு மறியா மறையை யறிந்துகொண்டு
செறிந்தே னுனது திருவடிக் கேதிரு வேவெருவிப்
பிறந்தேனின் னன்பர் பெருமை யெண்ணாத கருமநெஞ்சா
மறிந்தே விழுநர குக்குற வாய மனிதரையே.

மனிதருந் தேவரு மாயா முனிவரும் வந்து சென்னி
குனிதருஞ் சேவடிக் கோமள மேகொன்றை வார்சடைமே
பனிதருந் திங்களும் பாம்பும் பகீரதி யும்படைத்த
புனிதரு நீயுமென் புந்தியெந் நாளும் பொருந்துகவே.

பொருந்திய முப்புரை செப்புரை செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சி மருங்குன் மனோன்மணி வார்சடையோ
னருந்திய நஞ்சமு தாக்கிய வம்பிகை யம்புயமேற்
றிருந்திய சுந்தரி யந்தரி பாதமென் சென்னியதே. 5

சென்னிய துன்பொற் றிருவடித் தாமரை சிந்தையுள்ளே
மன்னிய துன்றிரு மந்திரஞ் சிந்தூர வண்ணப்பெண்ணே
முன்னிய நின்னடி யாருடன் கூடி முறைமுறையே
பன்னிய தென்றுமுன் றன்பர மாகம பத்ததியே 6

ததியுறு மத்திற் சுழலுமென் னாவி தளர்விலதோர்
கதியுறு வண்ணங் கருதுகண் டாய்கம லாலயனு
மதியுறு வேணி மகிழ்நனு மாலும் வணங்கியென்றுந்
துதியுறு சேவடி யாய்சிந்து ரானன சுந்தரியே. 7

சுந்தரி யெந்தை துணைவியென் பாசத் தொடரையெல்லாம்
வந்தரி சிந்துர வண்ணத்தி னாண்மகி டன்றலைமே
லந்தரி நீலி யழியாத கன்னிகை யாரணத்தோன்
கந்தரி கைத்தலத் தாண்மலர்த் தாளென் கருத்தனவே. 8

கருத்தன வெந்தைதன் கண்ணன வண்ணக் கனகவெற்பிற்
பெருத்தன பாலழும் பிள்ளைக்கு நல்கின பேரருள்கூர்
திருத்தன பாரமு மாரமுஞ் செங்கைச் சிலையுமம்பு
முருத்தன மூரலு நீயுமம் மேவந்தென் முன்னிற்கவே. 9

றுமிருந்துங் கிடந்து நடந்து நினைப்பதுன்னை
ன்றும் வணங்குவ துன்மலர்த் தாளெழு தாமறையி
ன்று மரும்பொரு ளேயரு ளேயுமையே யிமையத்
ன்றும் பிறந்தவ ளேயழி யாமுத்தி யானந்தமே. 10

ஆனந்த மாயென் னறிவாய் நிறைந்த வமுதமுமாய்
வானந்த மான வடிவுடை யாண்மறை நான்கினுக்குந்
தானந்த மான சரணார விந்தத் தவளநிறக்
கானந்த மாடரங் காமெம்பி ரான்முடிக் கண்ணியதே. 11

கண்ணிய துன்புகழ் கற்பதுன் னாமங் கசிந்துபத்தி
பண்ணிய துன்னிரு பாதாம் புயத்திற் பகலிரவா
நண்ணிய துன்னை நயந்தோ ரவையத்து நான்முன்செய்த
புண்ணிய மேதென்னம் மேபுவி யேழையும் பூத்தவளே. 12

பூத்தவ ளேபுவ னம்பதி னான்கையும் பூத்தவண்ணங்
காத்தவ ளேபின் கரந்தவ ளேகறைக் கண்டனுக்கு
மூத்தவ ளேயென்று மூவா முகுந்தற் கிளையவளே
மாத்தவ ளேயுன்னை யன்றிமற் றோர்தெய்வம் வந்திப்பதே. 13

வந்திப் பவருன்னை வானவர் தானவ ரானவர்கள்
சிந்திப் பவர்நற் றிசைமுகர் நாரணர் சிந்தையுள்ளே
பந்திப் பவரழி யாப்பர மானந்தர் பாரிலுன்னைச்
சந்திப் பவர்க்கெளி தாமெம்பி ராட்டிநின் றண்ணளியே. 14

தண்ணளிக் கென்றுமுன் னேபல கோடி தவங்கள் செய்தார்
மண்ணளிக் குஞ்செல்வ மோபெறு வார்மதி வானவர்தம்
விண்ணளிக் குஞ்செல் வமுமழி யாமுத்தி வீடுமன்றோ
பண்ணளிக் குஞ்சொற் பரிமள யாமளைப் பைங்கிளியே. 15

ளியே கிளைஞர் மனத்தே கிடந்து கிளிர்ந்தொளிரு
மொளியே யொளிரு மொளிக்கிடமே யெண்ணி
லொன்றுமில்லா
வெளியே வெளிமுதற் பூதங்க ளாகி விரிந்தவம்மே
ளியே னறிவள விற்கள வான ததிசயமே. 16

அதிசய மான வடிவுடையாளர விந்தமெல்லாந்
துதிசய வானன சுந்தர வல்லி துணையிரதி
திசய மான தபசய மாகமுன் பார்த்தவர்தம்
திசய மாகவன் ரேவாம பாகத்தை வவ்வியதே. 17

வ்விய பாகத் திறைவரு நீயு மகிழ்ந்திருக்குஞ்
சவ்வியு முங்க டிருமணக் கோலமுஞ் சிந்தையுள்ளே
வ்வியந் தீர்த்தென்னை யாண்டபொற் பாதமு மாகிவந்து
வவ்விய காலனென் மேல்வரும் போது வெளிநிற்கவே. 18

வெளிநின்ற நின்திரு மேனியைப் பார்த்தென் விழியுநெஞ்சுங்
ளிநின்ற வெள்ளங் கரைகண்ட தில்லை கருத்தினுள்ளே
தளிநின்ற ஞானந் திகழ்கின்ற தென்ன திருவுளமோ
ஒளிநின்ற கோணங்க ளொன்பது மேவி யுறைபவளே. 19

றைகின்ற நின்திருக் கோயிலின் கேள்வ ரொருபக்கமோ
றைகின்ற நான்மறை யின்னடி யோமுடி யோவமுத
றைகின்ற வெண்டிங்க ளோகஞ் சமோவென்ற
னெஞ்சகமோ
றைகின்ற வாரிதி யோபூர ணாசல மங்கலையே. 20

ங்கலை செங்கல சம்முலை யாண்மலை யாள்வருணச்
ங்கலை செங்கைச் சகல கலாமயி லுவுகங்கை
ாங்கலை தங்கும் புரிசடை யோன்புடை யாளுடையாள்
ங்கலை நீலிசெய் யாள்வெளி யாள்பசும் பெண்கொடியே. 21

கொடியே யிளவஞ்சிக் கொம்பே யெனக்குவம் பேபழுத்த
படியே மறையின் பரிமள மேபனி மாலிமயப்
பிடியே பிரமன் முதலாய தேவரைப் பெற்றவம்மே
யடியே னிறந்திங் கினிப்பிற வாமல்வந் தாண்டுகொள்ளே. 22

கொள்ளேன் மனத்தினின் கோலமல் லாதன்பர் கூட்டந்தன்னை
விள்ளேன் பரசம யம்விரும் பேன்வியன் மூவுலகுக்
குள்ளேய னைத்தினுக் கும்புறம் பேயுள்ளத் தேவிளைந்த
கள்ளே களிக்குங் களியே யளியவென் கண்மணியே. 23

மணியே மணியி னொளியே யொளிரு மணிபுனைந்த
வணியே யணியு மணிக்கழ கேயணு காதவர்க்குப்
பிணியே பிணிக்கு மருந்தே யமரர் பெருவிருந்தே
பணியே னொருவரை நின்பத்ம பாதம் பணிந்தபின்னே. 24

பின்னே திரிந்துன் னடியாரைப் பேணிப் பிறப்பறுக்க
முன்னே தவங்கண் முயன்றுகொண் டேன்முதன் மூவருக்கு
மன்னே யுலகுக் கபிராமி யென்னு மருமருந்தே
யென்னே யினியுன்னை யான்மறவா மனின் றேத்துவனே. 25

ஏத்து மடியவ ரீரே ழுலகினை யும்படைத்துங்
காத்து மழித்துந் திரிபவ ராங்கமழ் பூங்கடம்பு
சாத்துங் குழலணங் கேமண நாறுநின் றுளிணைக்கென்
னுத்தங்கு புன்மொழி யேறிய வாறு நகையுடைத்தே. 26

உடைத்தனை வஞ்சப் பிறவியை யுள்ள முருகுமன்பு
படைத்தனை பத்ம பதயுகஞ் சூடும் பணியெனக்கே
யடைத்தனை நெஞ்சத் தழுக்கையெல் லாநின் னருட்புனலாற்
றுடைத்தனை சுந்தரி நின்னரு ளேதென்று சொல்லுவதே. 27

சொல்லும் பொருளு மெனநட மாடுந் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடி யேநின் புதுமலர்த்தா
ால்லும் பகலுந் தொழுமவர்க் கேயழி யாவரசுஞ்
செல்லுந் தவநெறி யுஞ்சிவ லோகமுஞ் சித்திக்குமே. 28

ித்தியுஞ் சித்தி தருந்தெய்வ மாகித் திகழும்பரா
த்தியுஞ் சத்தி தழைக்குஞ் சிவமுந் தவமுயல்வார்
த்தியு முத்திக்கு வித்தும்வித் தாகி முளைத்தெழுந்த
த்தியும் புத்தியி னுள்ளே புரக்கும் புரத்தையன்றே. 29

அன்றே தடுத்தென்னை யாண்டுகொண்டாய் கொண்டதல்ல
[வென்கை
ன்றே யுனக்கினி நானென் செயினு நடுக்கடலுட்
சென்றே விழினுங் கரையேற் றுகைநின் றிருவுளமே
யான்றே பலவுரு வேயருவேயென் னுமையவளே. 30

மையு முமையொரு பாகரு மேக வுருவில்வந்திங்
கமையுந் தமக்கன்பு செய்யவைத் தாரினி யெண்ணுதற்குச்
மையங் களுமில்லை யின்றெடுப் பாளொரு தாயுமில்லை
மையு மமையுறு தோளியர் மேல்வைத்த வாசையுமே. 31

ஆசைக் கடலி லகப்பட் டருளற்ற வந்தகன்கைப்
ாசத்தி லல்லற் படவிருந் தேனைநின் பாதமென்னும்
ாசக் கமலந் தலைமேல் வலியவைத் தாண்டுகொண்ட
நசத்தை யென்சொல்லு வேனீசர் பாகத்து நேரிழையே. 32

ழைக்கும் வினைவழி யேயடுங் கால னெனைநடுங்க
ழைக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாயத்தர் சித்தமெல்லாங்
ழைக்குங் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே
ழைக்கும் பொழுதுன்னை யேயன்னை யேயென்பனோடிவந்தே

வந்தே சரணம் புகுமடி யாருக்கு வானுலகந்
தந்தே பரிவொடு தான்போ யிருக்குஞ் சதுர்முகமும்
பைந்தே னலங்கற் பருமணி யாகமும் பாகமும்பொற்
செந்தேன் மலரு மலர்கதிர் ஞாயிறுந் திங்களுமே. 34

திங்கட் பகவின் மணநாறுஞ் சீறடி சென்னிவைக்க
வெங்கட் கொருதவ மெய்திய வாவெண் ணிறந்தவிண்ணோர்
தங்கட்கு மிந்தத் தவமெய்து மோதரங் கக்கடலுள்
வெங்கட் பணியணை மேற்று யில்கூறும் விழுப்பொருளே. 35

பொருளே பொருண்முடிக் கும்போக மேயரும் போகஞ்செய்யு
மருளே மருளில் வருந்தெரு ளேயென் மனத்துவஞ்சத்
திருளே துமின்றி யொளிவெளி யாகி யிருக்குமுன்ற
னருளே தறிகின்றி லேனம்பு யாதனத் தம்பிகையே. 36

கைக்கே யணிவது கன்னலும் பூவுங் கமலமன்ன
மெய்க்கே யணிவது வெண்முத்து மாலை விடரவின்
பைக்கே யணிவது பன்மணிக் கோவையும் பட்டுமெட்டுத்
திக்கே யணியுந் திருவுடை யானிடஞ் சேர்பவளே. 37

பவளக் கொடியிற் பழுத்தசெவ் வாயும் பனிமுறுவற்
றவளத் திருநகை யுந்துணை யாவெங்கள் சங்கரனைத்
துவளப் பொருது துடியிடை சாய்க்குந் துணைமுலையா
ளவளைப் பணிமின்கண் டீரம ராவதி யாளுகைக்கே. 38

ஆளுகைக் குன்ற னடித்தா மறைகளுண் டந்தகன்பான்
மீளுகைக் குன்றன் விழியின் கடையுண்டு மேலிவற்றின்
மூளுகைக் கென்குறை நின்குறை யேயன்று முப்புரங்கண்
மாளுகைக் கம்பு தொடுத்தவில் லான்பங்கில் வாணுதலே. 39

வாணுதற் கண்ணியை விண்ணவர் யாவரும் வந்திறைஞ்சிப்
பேணுதற் கெண்ணிய வெம்பெரு மாட்டியைப் பேதைநெஞ்சிற்
காணுதற் கண்ணிய ளல்லாத கன்னியைக் காணுமன்பு
பூணுதற் கெண்ணிய வெண்ணமன் றோமுன்செய் புண்ணியமே. 40

புண்ணியஞ் செய்தன மேமன மேபுதுப் பூங்குவளைக்
கண்ணியஞ் செய்ய கணவருங் கூடிநங் காரணத்தா
னண்ணியிங் கேவந்து தம்மடி யார்க ண்டுவிருக்கப்
பண்ணிநஞ் சென்னியின் மேற்பத்ம பாதம் பதித்திடவே. 41

இடங்கொண்டு விம்மி யிணைகொண் டிறுகி யிளகிமுத்து
வடங்கொண்ட கொங்கை மலைகொண் டிறைவர் வலியநெஞ்சை
நடங்கொண்ட கொள்கை நலங்கொண்ட நாயகி நல்லரவின்
படங்கொண்ட வல்குற் பனிமொழி வேதப் பரிபுரையே 42

பரிபுரச் சீறடிப் பாசாங் குசைபஞ்ச பாணியின்சொற்
றிரிபுர சுந்தரி சிந்துர மேனிய டீமைநெஞ்சிற்
புரிபுர வஞ்சரை யஞ்சக் குனிபொருப் புச்சிலைக்கை
யெரிபுரை மேனி யிறைவர்செம் பாகத் திருந்தவளே. 43

தவளே யிவளெங்கள் சங்கர னார்மனை மங்கலமா
மவளே யவர்தமக் கன்னையு மாயின ளாகையினா
லிவளே கடவுளர் யாவர்க்கு மேலை யிறைவியுமாந்
துவளே னினியொரு தெய்வமுண் டாகமெய்த் தொண்டுசெய்தே 44

தொண்டுசெய் யாதுநின் பாதந் தொழாது துணிந்திச்சையே
பண்டுசெய் தாருள ரோவில ரோவப் பரிசடியேன்
கண்டுசெய் தாலது கைதவ மோவன்றிச் செய்தவமோ
மிண்டுசெய் தாலும் பொறுக்கைநன் றேபின் வெறுக்கையன்றே 45

வெறுக்குந் தகைமைகள் செய்யினுந் தம்மடி யாரைமிக்கோர்
பொறுக்குந் தகைமை புதியதன் றேபுது நஞ்சையுண்டு
கறுக்குந் திருமிடற் றனிடப் பாகங் கலந்தபொன்னே
மறுக்குந் தகைமைகள் செய்யினும் யானுன்னை
வாழ்த்துவனே 46

வாழும் படியொன்று கண்டுகொண் டேன்மனத் தேயொருவர்
வீழும் படியன்று விள்ளும் படியன்று வேலைநில
மேழும் பருவரை யெட்டுமெட் டாம லிரவுபகற்
சூழுஞ் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே. 47

சுடருங் கலைமதி துன்றுஞ் சடைமுடிக் குன்றிலொன்றிப்
படரும் பரிமளப் பச்சைக் கொடியைப் பதித்துநெஞ்சி
லிடருந் தவிர்த்திமைப் போதிருப் பார்பின்னு மெய்துவரோ
குடருங் கொழுவுங் குருதியுந் தோயுங் குரம்பையிலே. 48

குரம்பை யடுத்துக் குடிபுக்க வாவிவெங் கூற்றுக்கிட்ட
வரம்பை யடுத்து மறுகுமப் போது வளைக்கையமைத்
தரம்பை யடுத்த வரிவையர் சூழவந் தஞ்சலென்பாய்
நரம்பை யடுத்த விசைவடி வாய்நின்ற நாயகியே 49

நாயகி நான்முகி நாரா யணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கியென்
றாயகி யாதி யுடையாள் சரண மரணமக்கே. 50

அரணம் பொருளென் றருளொன் றிலாத வசுரர்தங்கண்
முரணன் றழிய முனிந்தபெம் மானு முகுந்தனுமே
சரணஞ் சரண மெனநின்ற நாயகி தன்னடியார்
மரணம் பிறவி யிரண்டுமெய் தாரிந்த வையகத்தே. 51

வையந் துரக மதகரி மாமகு டஞ்சிவிகை
பெய்யுங் கனகம் பெருவிலை யாரம் பிறைமுடித்த
வையன் றிருமனை யாளடித் தாமரைக் கன்புமுன்பு
செய்யுந் தவமுடை யார்க்குள வாகிய சின்னங்களே. 52

சின்னஞ் சிறிய மருங்கினிற் சாத்திய செய்யபட்டும்
பென்னம் பெரிய முலையுமுத் தாரமும் பிச்சிமொய்த்த
கன்னங் கரிய குழலுங்கண் மூன்றுங் கருத்தில்வைத்துத்
தன்னந் தனியிருப் பார்க்கிது போலுந் தவமில்லையே. 53

இல்லாமை சொல்லி யொருவர்தம் பாற்சென் றிழிவுபட்டு
நில்லாமை நெஞ்சி னினைகுவி ரேனித்த நீடுதவங்
கல்லாமை கற்ற கயவர்தம் பாலொரு காலத்திலுஞ்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே. 54

மின்னா யிரமொரு மெய்வடி வாகி விளங்குகின்ற
தன்னா ளகமகி ழானந்த வல்லி யருமறைக்கு
முன்னாய் நடுவெங்கு மாய்முடி வாய முதல்விதன்னை
யுன்னா தொழியினு முன்னினும் வேண்டுவ தொன்றில்லையே 55

ஒன்றா யரும்பிப் பலவாய் விரிந்திவ் வுலகெங்குமாய்
நின்றா ளனைத்தையு நீங்கிநிற் பாளென்ற னெஞ்சினுள்ளே
பொன்றாது நின்று புரிகின்ற வாவிப் பொருளறிவா
ரன்றா லிலையிற் றுயின்றபெம் மானுமென் னையனுமே. 56

ஐய னளந்த படியிரு நாழிகொண் டண்டமெல்லா
முய்ய வறஞ்செயு முன்னையும் போற்றி யொருவர்தம்பாற்
செய்ய பசுந்தமிழ்ப் பாமாலையுங்கொண்டு சென்றுபொய்யு
மெய்யு மியம்பவைத் தாயிது வோவுன்றன் மெய்யருளே. 57

அருணும் புயத்துமென் சித்தாம் புயத்து மமர்ந்திருக்குந்
தருணும் புயமுலைத் தையனல் லாடகை சேர்நயனக்
கருணும் புயமும் வதனும் புயமுங் கராம்புயமுஞ்
சரணும் புயமுமல் லாற்கண்டி லேனொரு தஞ்சமுமே. 58

தஞ்சம் பிறிதில்லை யீதல்ல தென்றுன் றவநெறிக்கே
நெஞ்சம் பயில நினைகின்றி லேனொற்றை நீள்சிலையு
மஞ்சம்பு மிக்கல ராகநின் றுயறி யாரெனினும்
பஞ்சஞ்சு மெல்லடி யாரடி யார்பெற்ற பாலரையே. 59

பாலினுஞ் சொல்லினி யாய்பனி மாமலர்ப் பாதம்வைக்க
மாலினுந் தேவர் வணங்கநின் றோன்கொன்றை
வார்சடையின்
மேலினுங் கீழ்நின்று வேதங்கள் பாடுமெய்ப் பீடமொரு
நாலினுஞ் சாலநன் றோவடி யேன்முடை நாய்த்தலையே. 60

நாயே னையுமிங் கொருபொருளாக நயந்துவந்து
நீயே நினைவின்றி யாண்டுகொண் டாய்நின்னை
யுள்ளவண்ணம்
பேயே னறியு மறிவுதந் தாயென்ன பேறுபெற்றேன்
றாயே மலைமகளே செங்கண் மாறிருத் தங்கைச்சியே. 61

தங்கச் சிலைகொண்டு தானவர் முப்புரஞ் சாய்த்துமத
வெங்கட் கரியுரி போர்த்தசெஞ் சேவகன் மெய்யடையக்
கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி கோகநதச்
செங்கைக் கரும்பு மலருமெப் போதுமென் சிந்தையதே 62

தேறும் படிசில வேதுவுங் காட்டிமுன் செல்கதிக்குக்
கூறும் பொருள் குன்றிற் கொட்டுந் தறிகுறிக் குஞ்சமய
மாறுந் தலைவி யிவளா யிருப்ப தறிந்திருந்தும்
வேறுஞ் சமயமுண் டென்றுகொண் டாடிய வீணருக்கே. 63

வீணே பலிகவர் தெய்வங்கள் பாற்சென்று மிக்கவன்பு
பூணே னுனக்கன்பு பூண்டுகொண் டேனின் புகழ்ச்சியன்றிப்
பேணே னொருபொழு துத்திரு மேனிப்ர காசமன்றிக்
காணே னிருநில முந்திசை நான்குங் ககனமுமே. 64

ககனமும் வானும் புவனமுங் காணவிற் காமனங்கந்
தகனமுன் செய்த தவப்பெரு மாற்குத் தடக்கையுஞ்செம்
முகனுமுந் நான்கிரு மூன்றெனத் தோன்றிய மூதறிவின்
மகனுமுண் டாயதன் றோவல்லி நீசெய்த வல்லபமே. 65

வல்லப மொன்றறி யேன்சிறி யேனின் மலரடிச்செம்
பல்லவ மல்லது மற்றென் றிலேன்பசும் பொற்பொருப்பு
வில்லவர் தம்முடன் வீற்றிருப் பாய்வினை யேன்றொடுத்த
சொல்லவ மாயினு நின்றிரு நாமங்க டோத்திரமே. 66

தோத்திரஞ் செய்து தொழுதுமின் போலுநின் றோற்றமொரு
மாத்திரைப் போது மனத்தில்வை யாதவர் வண்மைகுலங்
கோத்திரங் கல்வி குணங்குன்றி நாளுங் குடில்கடொறும்
பாத்திரங் கொண்டு பலிக்குழ லாநிற்பர் பாரெங்குமே. 67

பாரும் புனலுங் கனலும்வெங் காலும் படர்விசும்பு
ஊருமுருகு சுவையொளி யூறொலி யொன்றுபடச்
சேருந் தலைவி சிவகாம சுந்தரி சீரடிக்கே
சாருந் தவமுடை யார்படை யாத தனமில்லையே. 68

தனந்தருங் கல்வி தருமொரு நாளுந் தளர்வறியா
மனந்தருந் தெய்வ வடிவுந் தருநெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரு நல்லன வெல்லாந் தருமன்ப ரென்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாளபி ராமி கடைக்கண்களே. 69

கண்களிக் கும்படி கண்டுகொண் டேன்கடம் பாடவியிற்
பண்களிக் குங்குரல் வீணையுங் கையும் பயோதரமு
மண்களிக் கும்பச்சை வண்ணமு மாகி மதங்கர்குலப்
பெண்களிற் றோன்றிய வெம்பெரு மாட்டிதன் பேரழகே. 70

அழகுக் கொருவரு மொவ்வாத வல்லி யருமறைகள்
பழகிச் சிவந்த பதாம்புயத் தாள்பனி மாமதியின்
குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பிருக்க
விழவுற்று நின்றநெஞ் சேயிரங் கேலுனக் கென்குறையே 71

என்குறை தீரநின் றேத்துகின் றேனினி யான்பிறக்கி
னின்குறை யேயன்றி யார்குறை காணிருநீள் விசும்பின்
மின்குறை காட்டி மெலிகின்ற நேரிடை மெல்லியலாய்
தன்குறை தீரவெங் கோன்சடை மேல்வைத்த தாமரையே. 72

தாமங் கடம்பு படைபஞ்ச பாணந் தனுக்க ரும்பு
யாமம் வயிரவ ரேத்தும் பொழுதெமக் கென்றுவைத்த
சேமந் திருவடி செங்கைக ணான்கொளி செம்மையம்மை
நாமந் திரிபுரை யொன்றோ டிரண்டு நயனங்களே. 73

நயனங்கண் மூன்றுடை நாதனும் வேதமு நாரணனு
மயனும் பரவு மபிராமி வல்லி யடியிணையைப்
பயனென்று கொண்டவர் பாவைய ராடவும் பாடவும்பொற்
சயனம் பொருந்து தபனியக் காவினிற் றங்குவரே. 74

தங்குவர் கற்பகத் தாருவி னீழலிற் றாயரின்றி
மங்குவர் மண்ணில் வழுவாப் பிறவியை மால்வரையும்
பொங்குவ ராழியு மீரேழ் புவனமும் பூத்தவுந்திக்
கொங்கிவர் பூங்குழ லாடிரு மேனி குறித்தவரே. 75

குறித்தேன் மனத்தி னின்கோல மெல்லா நின் குறிப்பறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி வண்டுகிண்டி
வெறித்தே னவிழ்கொன்றை வேணிப் பிரானொரு
கூற்றைமெய்யிற்
பறித்தே குடிபுகு தும்பஞ்ச பாண பயிரவியே. 76

பயிரவி பஞ்சமி பாசாங் குசைபஞ்ச பாணிவஞ்ச
ருயிரவி யுண்ணு முயர்சண்டி காளி யொளிருங்கலா
வயிரவி மண்டலி மாலினி சூலி வராகியென்றே
செயிரவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே. 77

செப்புங் கனக கலசமும் போலுந் திருமுலைமே
லப்புங் களப வபிராம வல்லி யணிதரளக்
கொப்பும் வயிரக் குழையும் விழியின் கொழுங்கடையுந்
துப்பு நிலவு மெழுதிவைத் தேனென் றுணைவிழிக்கே.

விழிக்கே யருளுண் டபிராம வல்லிக்கு வேதஞ்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண் டெமக்கவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்றுவெம் பாவங்க ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே யழுந்துங் கயவர்தம் மோடென்ன கூட்டினியே 79

கூட்டிய வாவென்னைத் தன்னடி யாரிற் கொடியவினை
யோட்டிய வாவென்க ணோடிய வாதன்னை யுள்ளவண்ணங்
காட்டிய வாகண்ட கண்ணு மனமுங் களிக்கின்றவா
வாட்டிய வாநட மாடகத் தாமரை யாரணங்கே. 80

அணங்கே யணங்குக ணின்பரி வாரங்க ளாகையினால்
வணங்கே னொருவரை வாழ்த்துகிலே னெஞ்சில் வஞ்சகரோ
டிணங்கே னெனதுன தென்றிருப் பார்சிலர் யாவரொடும்
பிணங்கே னறிவொன்றி லேனென்க ணீவைத்த பேரளியே 81

அளியார் கமலத்தி லாரணங் கேயகி லாண்டமுநின்
னொளியாக நின்ற வொளிர்திரு மேனியை யுள்ளுந்தொறுங்
களியாகி யந்தக் காரணங்கள் விம்மிக் கரைபுரண்டு
வெளியாய் விடினெங்ங னேமறப் பேனின் விரகினையே. 82

விரவும் புதுமல ரிட்டுநின் பாத விரைக்கமல
மிரவும் பகலு மிறைஞ்சவல் லாரிமை யோரெவரும்
பரவும் பதமு மயிரா வதமும் பகீரதியு
முரவுங் குலிசமுங் கற்பகக் காவு முடையவரே. 83

உடையாளை யொல்கு செம்பட் டுடையாளை யொளிர்மதிச்செஞ்
சடையாளை வஞ்சகர் நெஞ்சடை யாளைத் தயங்கு நுண்ணூ
லிடையாளை யெங்கள் பெம்மா னிடையாளை யிங்கென்னையினிப்
படையாளை யுங்களை யும்படை யாவண்ணம் பார்த்திருமே 84

பார்க்குந் திசைதொறும் பாசாங் குசமும் பனிச்சிறைவண்
டார்க்கும் புதுமல ரைந்துங் கரும்புமென் னல்லலெல்லாந்
தீர்க்குந் திரிபுரை யாடிரு மேனியுஞ் சிற்றிடையும்
வார்க்குங் குமமுலை யும்முலை மேன்முத்து மாலையுமே. 85

மாலயன் றேட மறைதேட வானவர் தேடநின்ற
காலையுஞ் சூடகக் கையையும் கொண்டு கதித்தகப்பு
வேலைவெங் காலனென் மேல்விடும் போதுவெளி நில்கண்டாய்
பாலையுந் தேனையும் பாகையும் போலும் பணிமொழியே 86

மொழிக்கு நினைவுக்கு மெட்டாத நின்றிரு மூர்த்தியென்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்ற தால்விழி யான்மதனை
யழிக்குந் தலைவ ரழியா விரதத்தை யண்டமெல்லாம்
பழிக்கும் படியொரு பாகங்கொண் டாளும் பராபரையே 87

பரமென் றுனையடைந் தேன்றமி யேனுமுன் பத்தருக்குட்
டரமன் றிவனென்று தள்ளத் தகாது தரியலர்தம்
புரமன் றெரியப் பொருப்புவில் வாங்கிய போதிலயன்
சிரமொன்று செற்றகை யானிடப் பாகஞ் சிறந்தவளே 88